உ

# மாரி - பதினாறு



காரைக்குடி மீனாட்சிபுரம்

## அருள்மிகு முத்துமாரியம்மன்

மீது பாடப்பட்ட தோத்திரப் பாடல்கள்




சித. சிதம்பரம்

ப. மு. சித. வீடு,

பழநியப்ப விலாசம்

134, முதல் வீதி முத்துப்பட்டணம்,

காரைக்குடி - 630 001.

3-3

"பொற்கிழிக் கவிஞர்" "காசி ஸ்ரீ" "கவிஞர்கோ"

**அரு. சோமசுந்தரன் (அருசோ) அவர்களின்**

# அணிந்துரை

கவிஞர் சித. சிதம்பரம் அவர்களின் 'மாரி பதினாறு' நூல் முழுவதும் படித்து மகிழ்ந்தேன். இளைய தலைமுறையின் இனிய கவிஞரான சிதம்பரம் முத்துப்பட்டணம் முத்துமாரியம்மன் அருளுக்குப் பாத்திரமாகி அவள் திருவடிக்குத் தன் பாத்திறத்தைக் காணிக்கையாக்கிப் பதினாறு பேறுகளும் பெறுகிறார்.

முத்துமாரி அம்மனின் அருள்வீச்சில் வியந்து அடிமையாகி இருக்கும் அடியார்கள் இலட்சோப இலட்சம்! அவர்களில் அடியேனும் ஒருவன் முத்துமாரி அம்பிகையின் வரலாற்றை எழுதும் வாய்ப்பு எனக்குக் கிடைத்தது. அம்பிகை பற்றில் பதினாறு பாடல்களைப் பாடித்தொழும் கவிஞர் சித. சிதம்பரம் இன்னும் எவ்வளவோ பாட இருக்கிறார். "அப்பனும் இன்றியே அன்னையும் இன்றியே பிள்ளை நீ வந்ததுண்மை" என்ற பாடல் மிக அற்புதம். இப்பாடல்களைப் பாராயணம் செய்பவர்கட்கு அம்பாள் அனைத்து நலங்களும் தருவாள். கவிஞர் சித. சிதம்பரத்துக்கு என் பாராட்டுக்களும் ஆசியும் உரியன.

**அரு. சோமசுந்தரன்**

# சான்றோர் வாழ்த்து

மரபிலே புதுமை ஊதும்
　　மகுடியே! மூத்த கன்றே!
உறவிலே உள்ளம் காட்டும்
　　உண்மையே! கவிதைச்சிந்துக்
கறவையே! அரங்கைத் தூக்கும்
　　கைகளே! நெஞ்சவானின்
பறவையே! கவிதை உண்டேன்
　　படைக்கிறேன் நன்றிப்பொங்கல்

கவியரசர்
டாக்டர் அர. சிங்காரவடிவேலன்

நண்பர் சிதம்பரத்தின் நன்னயஞ்சால் பாக்களுக்கு
　　என்ன உவமை எடுத்துரைப்பேன் - அன்பனிவன்
நந்திவர்மன் காலத்தே நாவசைத்தே நின்றிருந்தால்
　　தந்திருப்பான் தன்நாட்டைத்தான்.

டாக்டர் பழனி இளங்கம்பன்

உ

சிவமயம்

# மாரி - பதினாறு

மாரிநீ வருக! வளமெலாம் தருக!
மாணிக்க வல்லி வருக!
சேரியிலாயினும் மாடியிலாயினும்
தேடுவோர் தேவி வருக!
கோரிய யாவையும் கோடியாய் ஈந்திடும்
கோதையே ஓடி வருக!
பாரிலே லட்சமாய்ப் பால்குடம் காவடிகள்
பாலிக்கும் அன்னையே வருக!

அப்பனும் இன்றியே அன்னையும் இன்றியே
பிள்ளை நீ வந்ததும் உண்மை!
செப்பிள மேனி கொப்புளம் நூறு
சேவிக்க நின்றதும் உண்மை!
இப்புவி உய்ய இங்குநீ முக்தி
எய்திய தெய்வம் உண்மை!
கற்பனை இல்லை! கட்டுரை இல்லை!
கண்முனே நடந்த உண்மை!

சொந்தமே இல்லாது வந்ததாய் உனக்குச்
சொந்தமாய்க் கோடி மக்கள்
தொந்தரவு நோய் பகை தொல்லைகள்
துயரங்கள் ஆன சிக்கல்
எந்த விதமாயினும் முந்திநீ சந்தித்தால்
நைந்துவிடும் நஞ்சுமுட்கள்
அந்தமே இல்லாத ஆதியும் காணாத
அன்னையாய் இங்கு நிற்பாள்!

முத்தொடு நாயகி இங்குநீ உற்றதால்
முத்துப் பட்டணம் ஆமோ?
முத்துப் பட்டணம் முத்தொடு வந்ததால்
முத்து மாரியாய் நீயோ?
சித்திரப் பதுமைநீ பத்தான வயதினில்
தெய்வமாத் தோற்றம் ஏனோ?
சத்தியம் காத்திட இத்தரை வந்தநீ
சத்தியின் வடிவு தானோ?

அன்னையுன் எச்சிலும் நாவிலே பட்டதால்
ஆயினன் காளி தாசன்
சொன்னயம் ஊறவே உன்னலம் மேவவே
சொல்லுவேன் மாரிதாசன்
தென்னவள் திருவிழா மாசியிற் பெருவிழா
தெருவெலாம் மஞ்சள் ஆடை!
தன்னையே மறந்தனர் சரணென வந்தனர்
சன்னதி பாலின் ஓடை!

அபிராமிப் பட்டர்முன் முழுஇரா நாளிலே
நிலாவரச் செய்தவள் நீ!
நபிபோற்றும் சோதரரும் சன்னதி முன்னர்
நலம்பெறச் செய்தவள் நீ!
சபித்திடும் வன்கண்மை திட்டிகள் பேயாம்
சல்லியம் அழிப்பவள் நீ!
அபிமன்யு போற்றிடும் அரங்கனின் சோதரி;
அன்னையே முத்துமாரி!

சிம்ம வாகினி திரிசூலி நீலிநீ
தேவியே கரிய மாரி!
எம்மதமும் வணங்கிடும் வேளாங் கண்ணியே!
இமயி பகவதி காளி!
பொய்மையே அழித்திடும் பாப்பாத்தித்தாயே!
பொலிவுடை பரவை நாச்சி!
அம்மையே மூகாம்பிகை ஆயிரம் கண்ணுடை
அன்னையே முத்து மாரி!

தட்சனின் மகளாகி சிவனையே நினைத்த
தவமோ குமரி நிலத்தில்!
தச்சனின் மகளாக இத்தலம் புகழ்தரு
தாய் மீனாட்சி புரத்தில்!
அச்சங்க ளோடு நச்சியே வந்திட
அகன்றிடும் நூறு பயம்
எச்சமயத்திலும் நிச்சயம் காத்திடும்
இருதாள் எங்கள் அபயம்

கரந்தாங்கு சூலமும் கற்பூர தீபமும்
காணாதகண் என்ன கண்ணோ?
சிரந்தாங்கு கிரீடமும் தேவிநின் பீடமும்
சேராதகால் என்ன காலோ?
பரன்தாங்கு தேவியை வரந்தாங்கு சோதியைப்
பாடாதவாய் என்ன வாயோ?
அறந்தாங்கும் வல்லியே! அனல்தாங்கும் காவடிகள்
ஆடு முத்து மாரியே!

பொய்நகை ஏது? புன்னகை ஏது?
புரியவே இல்லை தாயே!
செய்வினை வஞ்சகம் உட்பகை, தீமைகள்
தீர்த்திட அருள்க நீயே!
மைதவழ்க் கண்ணியே! மயிலவன் அன்னையே!
மலராடு கூந்தலின் வாழ்வே!
செய்யெலாம் உன்செய்! சேயெலாம் உன்சேய்!
செய்கவே நன்மை நீயே!

வார்த்தைக்கு வார்த்தை பாடிடப் பாடிட
வற்றாது ஊறும் உன்பாடல்
பாத்திறம் இல்லை உன்பால்திறம் அன்பின்
பாத்திரம் ஆனதுஎன் ஆவல்
சூத்திர தாரிநீ ஆட்டியே வைக்கிறாய்
தொழுகிறேன் உனது காவல்
தோத்திரம் தோத்திரம் தேவைநீ மாத்திரம்
தூயையே முத்துமாரி!

ஜாதிமத வேறுபாடு சங்கடங்கள் வேண்டாமே!
சகலரும் அன்பு கொள்க!
நீதிநெறி தருமங்கள் நியாயங்கள் அறவழிகள்
நிலவுலகில் நின்று வாழ்க!
பாதிப்பில் ஆழ்ந்தவர் சோதனை காண்பவர்
பாடுகள் நீங்கி வாழ்க!
சோதியென வருபவள் சொக்கனைச் சேர்பவள்
தூயையே முத்துமாரி!

சுற்றிச் சுழன்றிடும் சூரிய சந்திரர்
சுடர்விழி ஒளியில் வீச
கற்றைக் குழல்முதல் கனக தண்டைவரை
கருணை நதியாய் ஓட
பற்றிக் கொண்டநின் பக்தரின் இடர்தீப்
பற்றிய பஞ்சாய்ப்போக
அற்றைச் சிறுமிநீ அன்னை மீனாட்சியாய்
அமர்ந்தையே முத்துமாரி!

காரைநகர் காணாத பெரிய திருவிழா
காளி உன் திருவிழாவே!
சாரி சாரியாப் பல லட்சம் பால்குடம்
தாங்கும்விழா உன்விழாவே!
ஊரை வளம் செய்க! உற்றார் நலம் பெறுக!
உலகெலாம் சிறந்து வாழ்க!
நீறிடும் நெற்றியும் நினதுகைக்குங்குமமும்
நித்தமும் காவல் கொள்க!

முழக்குக நாதசுரம்! முழக்குக தமிழ் வேதம்!
மூவாத தாயைப் போற்றி!
கிழக்கிலே முகம்பார்க்கும் இயக்கியின் அருள்நோக்குக்,
கீர்த்தியை நாளும் போற்றி!
முழக்குச்சி அளக்குமோ மூவுலகை உன்புகழ்
முழுதும் பாட யானோ?
உழக்கிலே அடங்குமோ சமுத்திரம்? அடங்குமே
உன்பக்தியால் போற்றி! போற்றி!

ஓங்காரக் குடிஎன்ற பழம்பெயர் மீண்டும்
ஓங்கிடச் செய்யுமுன் பாதம்
ஆங்காரம் அகங்காரம் தீங்காலம் போங்காலம்
ஆயிடச் செய்யுமுன் பாதம்
ஆங்காலம் நற்காலம் அன்பான பொற்காலம்
ரீங்காரம் செய்யுமுன் பாதம்
பாங்கான செல்வவளம் பதினாறும் அருள்கவே
பாவையே முத்துமாரி!

தேசியமும் தெய்வீகமும் காப்போம்-பசும்பொன்
தேவரின் வழிநடப்போம்

# எஸ். ஆர். தேவர்,

தேவர் பேரவை
மாவட்டச் செயலாளர்,
சிவகெங்கை மாவட்டம்

இருப்பு : தேவர் மாளிகை
காரைக்குடி

தொலைபேசி : 35495